8th September 1960]

SRI K. B. S. MANI : இம்மாதிரியாக பல சர்க்கரை ஆலைகளை ஆரம்பித்துக் கொண்டே போவதால் நெல் விளைவு அதிகமாகப் பாதிக்கப்படுகிறதே, அதைத் தடுக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : நெல் உற்பத்தியும் அதிகப் படத்தான் வேண்டும், அதிகப்படுத்த முடியும். இப்போது இருக்கிற நிலைமையிலேயே, சர்க்கரை ஒரு டன் என்பது ஐந்து டன் அரிசிக்கு ஒப்பாகும். ஆகவே சர்க்கரை உற்பத்தி செய்வதும் அவசிய மானதுதான்.

SRI S. M. ANNAMALAI : அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது "நோ" என்றார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டப் புத்தகத்தில் சர்க்கரை ஆலை ஆரம்பிக்க வேண்டுமென்று சொல்லியிருக் கிறது. இது உண்மையில் இத் திட்டத்தில் சேர்க்கப்படுமா அல்லது சேர்க்கப்படாதா ?

THE HON. SRI R. VENKATARAMAN: ஜோஸ்யம் சொல்வதற்கில்லை. இன்னும் தீர்மானிக்கப்படவில்லை என்று தான் சொன்னேன். எட்டு பாக்டரி வைப்பதற்கு சிபார்சு செய்திருக்கிறோம். இவ்வளவுதான் சென்னை ராஜ்யத்திற்கு என்று சொல்ல மாட்டேன். இன்னும் கொடுக்கிற பாக்டரி களையும் வாங்கிக் கொள்வோம்.

SRI A. VEDARATHNAM : எட்டு பாக்டரிகளுக்குச் சிபார்சு செய் திருப்பதாகக் கூறினார்களே, எந்த எந்த இடத்தில் என்று சொல்வார் களா?

THE HON. SRI R. VENKATARAMAN : அதற்கு மேற்கொண்டும் சிபார்சு செய்வதாக இருப்பதனாலே இதை மட்டும் சொல்லவேண்டாம் என்று இருக்கிறேன்.

SRI T. T. DANIEL : In view of the fact that there is deficit of sugar in the State, will the Government consider the desirability of manufacturing sugar from jaggery also?

THE HON. SRI R. VENKATARAMAN : I am not sure how far that would be successful. There is consumer resistance to jaggery sugar.

SRI S. M. ANNAMALAI : அந்த மனுவிலிருந்து அங்கே சர்க்கரை ஆலை வைப்பதற்கு முடிவுக்கு வந்துவிட்டார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : மத்திய சர்க்காருக்கு சிபார்சு செய்திருக்கிறோம்.

*Co-operative training*

* 538 Q.—SRI N. R. THIAGARAJAN: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா —

(அ) மதுரை பாண்டிய நாடு கூட்டுறவுப் பயிற்சி ஸ்தாபனத்திற்கு கட்டவிருக்கும் கட்டிடத்திற்கு எத்தனை டெண்டர்கள் வந்தன ?

(ஆ) குறைந்த விகிதத்தை விடுத்துக் கூடுதல் விகிதத்தை அங்கீகரித்தது வாஸ்தவமா?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) Five tenders were received.

(ஆ) The Board of Directors have accepted a higher tender for certain reasons and sought the approval of the Registrar of Co-operative Societies for the same. The matter is under considera-tion of the Registrar of Co-operative Societies.

[ 8th September 1960

**Sri N. R. THIAGARAJAN** : இந்தப் பாண்டிய நாடு கூட்டுறவு பயிற்சி ஸ்தாபனத்திற்கு மொத்த எஸ்டிமேட் தொகை எவ்வளவு ? அதில் யார் யார் டெண்டர் கொடுத்திருக்கிறார்கள் ? மிக அதிகமாக டெண்டர் கொடுத்தவர்களுக்கு அவ்வேலை கொடுக்கப்பட்டிருப்பதின் காரணம் என்ன ? இப்படிச் செய்தவர்கள்மீது நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : ஐந்து பேர்கள் டெண்டர் கொடுத்தார்கள். அந்த விவரம் வருமாறு :—

(1) ஸ்ரீ எம். அழகு பிள்ளை—ரூ. 1,47,049·50.

(2) ஸ்ரீ எஸ். மொகமட் பாச்சா சாகிப்—ரூ. 1,52,986·50.

(3) மெஸ்ஸர்ஸ் சக்தி என்ஜினியரிங் கம்பெனி—ரூ. 1,53,420·50.

(4) ஸ்ரீ எம். ராமச்சந்திரன்—ரூ. 1,57,027·50.

இதிலே முதலாவதாக ஸ்ரீ எம். அழகு பிள்ளை அவர்களுக்கு இதற்கு முன்னால் இது மாதிரியாக டெண்டர் எடுத்து வேலை செய்திருக்கக்கூடிய அனுபவம் கிடையாது. இரண்டாவதாக மொகமட் பாச்சா சாகிப் அவர்களுக்கு இம்மாதிரியாக பெரிய வேலை எடுத்துப் பழக்கம் இல்லை, இரண்டாவது அவர் டி. பி. சானடோரியம் கட்ட எடுத்த டெண்டர் வேலையையே இன்னும் பூர்த்தி செய்யாமல் இருக்கிறார். மூன்றாவதாக சக்தி என்ஜினியரிங் கம்பெனியாருக்கு சிறிய சிறிய சர்க்கார் டெண்டர் வேலைகளை எடுத்துச் செய்திருக்கக்கூடிய பழக்கம் இருந்தாலும்கூட இம்மாதிரியான கட்டிடம் கட்டுவதற்கு அவர்களிடம் போதுமான வசதி இல்லை என்று சொல்லப் பட்டது. நான்காவதாக ஸ்ரீ எம். ராமச்சந்திரன் அவர்கள் ரூ. 1,57,027·50 க்கு டெண்டர் கொடுத்தாலும் அதை ரூ. 1,53,507-க்குள் செய்வதற்கு ஒத்துக்கொண்டார். கடந்த பத்து வருஷமாக மதுரை மில்லில் இது போன்ற கட்டிடங்கள் கட்டி நல்ல பழக்கம். மேலும் பாண்டியன் பாங்குக்கு 7 லட்சம் ரூபாயில் கட்டிடம் கட்டியும் வருகிறார். ஆகவே அவர் தகுதி பற்றித்தான் அவருக்கு இவ்வேலை கொடுக்கப்பட்டது. பொதுவாக டெண்டர்கள் வரவழைத்தால் குறைவான டெண்டர் கொடுத்தவருக்குத் தான் இவ்வேலையை போர்ட் ஆப் டைரெக்டர்கள் கொடுக்க முடியும். அதிகமான டெண்டர் கொடுத்தவரிடத்தில் அவ்வேலை கொடுக்கப்படவேண்டு மென்றால் ரிஜிஸ்ட்டிரார் ஆப் கோவாப்பரேடிவ் சொஸைடியின் அனுமதி பெற்றுத்தான் தரமுடியும். அனுமதி கோரி அவர்கள் எழுதியிருக்கிறார்கள். சர்க்காரும் அதைப் பரிசீலனை செய்து வருகிறது.

**Sri N. R. THIAGARAJAN** : மற்ற இலாகாக்களிலும் இவ்வாறு டெண்டர் வரவழைக்கப்படும்போது இந்த மாதிரியாக அனுமதிக்கப்படுகிறதா ? டெண்டர் கொடுக்கும்போதே அவர்களுடைய தகுதி பார்க்காமலா கொடுக்கப்படுகிறது ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : டெண்டர்யார் வேண்டுமானாலும் போடலாம். டெண்டர் பீஸ் கட்டிவிட்டால் போதுமானது. யோக்கியதாம்சங்கள் இருக்கக்கூடியவர்கள்தான் டெண்டர் போட முடியும் என்று சொல்ல முடியாது.

### *College of Indigeneous Medicine*

*539 *Q.*—**Sri A. VEDARATNAM**: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா —

(அ) நாட்டு வைத்தியக் கல்லூரி அமைக்க அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்திருக்கிறது ?

(ஆ) எந்தெந்த வைத்திய முறைகள் அங்கு போதிக்கத் திட்டமிடப் பட்டிருக்கிறது ?

(இ) சமீபத்தில் மூடப்பட்ட இந்திய வைத்தியக் கல்லூரியிலிருந்து இப்புதிய கல்லூரி எந்தெந்த முறையில் வித்தியாசப்படும் ?

(ஈ) இக் கல்லூரி எப்போது துவங்கும் ?